ஸ்ரீ லாலா

# லஜபதிராயவர்கள்

## சரித்திரமும் கட்டுரைகளும்.



"விவேகபாநு"ப் பிரசுரம்.



மதுரை:
விவேகபாநு அச்சியந்திரசாலைப்
பதிப்பு.

1907

(விலை அணா 2.)



லாலா லாஜ்பத்ராய்



# ஸ்ரீயுக்த லாலா லஜபதிராய் சரித்திரம்.

சுதேசமித்திரன் பத்திரிகையிலிருந்து



மேற்கே வீரபூமியாகிய பாஞ்சால நாட்டின் ஒருபுரத்தினின்று கிழக்கே பிரஹ்மபுத்திர நதத்தின் மறுபுறம் வரையிலும், வடக்கே ஹிமாசலத்தின் அடிவாரத்திலுள்ள சிம்லாவிலிருந்து தெற்கே இந்துமகாசமுத்திரத்தின் நுரையலைகுமுறும் குமரிமுனைவரையிலும் அகண்டமான பரதகண்ட முழுவதிலும் இப்பொழுது எந்தப் புருஷசிங்கத்தின் துக்ககரமானகதியை நினைந்துநினைந்து கோடிக்கணக்கான நெஞ்சங்கள் வருந்துகின்றனவோ, எவன் பாரதமாதாவின் காரிய நிர்வாகியும், தேஜஸ்வியும், ஆத்மதியாகியும், சுவாதீன மனத்தோனுமாகிய உத்தமபுத்திரனோ, எவன் பாஞ்சால தேசத்தின் பிரசித்த ஜனத்தலைவனோ, பஞ்சநதாவசிகளின் ஹிருதய தேவதையோ, தாய்நாட்டின் அருமைத்திருமகனோ, சுதேசியம் ஸ்வராஜ்யம் என்பவற்றின் ஏகநிஷ்டையுள்ள உபாசகனோ ஜாதிய (பொதுஜன) யஜ்ஞத்தின் நிஷ்காம (பலாபேக்ஷையற்ற) புரோகிதனோ, ஆத்மசக்திநிறைந்த அக்னிபர்வ

தமோ, அஞ்சா நெஞ்சமுள்ள பஞ்சாப் கேஸரியோ-அப்படிப்பட்ட ஸ்ரீயுக்த லாலா லஜபதிராயின் உருவப்படத்தை நேயர்களே! இதோபாருங்கள்!

அதிர்ஷ்ட ஹீனத்தால் இன்று லஜபதிராய் ராஜகோபத்துக்குள்ளாகித் தமது கர்மபூமியாகிய ஜன்மபூமியிலிருந்து வெகுதூரத்திலுள்ள பர்மாதேசத்துக்கு பிரஷ்டம் செய்யப்பட்டிருக்கிறார். இன்று ஆங்கிலேய சகோதர பத்திரிகைகள் அவரைச்சுட்டி என்னென்னவோ பிதற்றிக்கொக்கரிக்கின்றன. ஆனால் இது அவ்வளவும் அவற்றின் இயற்கைக்கு முழுவதும் பொருந்தியதுதானே! யானை சேற்றில் விழுந்துவிட்டால், தவளைக்கும் அதை உதைக்கும்படியான தைரியம் உண்டாகிவிடுகிறதல்லவா!?

லஜபதிராய் யாவர்? அவர் பாஞ்சால நாட்டின் பெரிய ஜனநாயகர்; பேசுந்திறம்பெற்ற பிரசித்த நாவலர்; சிறந்த நூலாசிரியர்; சாமர்த்தியமாய் வாதிக்கும் சிறந்த வக்கீல்; உத்தம கர்மவீரர். அவரைப்பஞ்சநதநாட்டின் பிரதான புருஷனென்றாலும் மிகையாகமாட்டாது. லஜபதிராய் ஒருசெய்கை காட்டினால், பாஞ்சாலநாடு முழுவதும் அதன்படியாடும். லஜபதியின் பொருள், சக்தி, சாமர்த்தியம் இவையெல்லாம் கவர்ன்மெண்டார் இப்பொழுது அநுசரிக்கும் ஆளுகை யொழுங்குக்கு முற்றும் விரோதமாய் நின்றன. அவர் பாஞ்சால தே

சவாசிகளுக்குள் வீரதீரபராக்கிரமமுள்ள மானிடத்தன்மை யை நிலைகொள்ளச்செய்ய முயன்றார். பிறரை நம்பி ஏமாந்து போகாமல் தங்களுக்கு வேண்டியனவற்றைத் தாமே செய்துகொள்ள வேண்டுமென்ற தன் மதியின் உயர்வை சாதாரண ஜனங்களுக்குப் போதித்தார். ஊக்கங்குன்றி முயற்சியற்றிருந்த அவர்களது நெஞ்சங்களில் மகாசக்தியின் சுறுசுறுப்பை உண்டாக்கியும், இனி முன்னுக்குவர மார்க்கமில்லையென்று தைரியத்தைவிட்டு நிராசைசெய்து கொண்டவர்களது பிராணனில் புதிய ஆசையைப் புகுத்தியும் உபகரித்தார். இப்படிப்பட்டவரை கவர்ன்மெண்டார் சத்துருவென்றெண்ணி யாதொரு விசாரணையுமின்றி தேசப்பிரஷ்டம் செய்துவிட்டனர். ஆயிரம் பறவைகள் வந்து தங்குவதற்கு ஆசிரமமாயிருந்த ஆகாயத்தையளாவிய ஆலமரத்தின்மேல் பேரிடி விழுந்துவிட்டது!

ஜாதிய வாழ்க்கையாகிய ஆற்றின் ஓட்டத்தைத் தடுப்பதற்காகவே இந்தக்காரியம் செய்யப்பட்டது. இப்படிச் செய்யப்பட்டது இதுவே முதற்செயலன்று. லோகமான்மிய ஸ்ரீ திலகமஹரிஷியை சிறைப்படுத்தியபொழுதே இச்செயலுக்கு அங்குரார்ப்பணம் செய்யப்பட்டது. இப்பொழுது லாலா லஜபதியின் தேசபிரஷ்டம் அதற்கு ஆஹுதியாயிற்று. ஆனல் இது தான் பூர்ணாஹுதியென்று யார் சொல்லக்கூடும்?

ராஜநீதியின் மார்க்கம் ஆபத்துக்கள் அற்ற சுகமானவழியன்று. இது லஜபதிக்குத் தெரியும். இதின் சுவரூபத்தைத் தெரிந்தே அவர் இம்முட்படுக்கையிற் படுக்கலானர். தேசோந்நதத்துக்காகத் தாம் செய்யவேண்டிய கடமையைக்காட்டிலும் தம்முயிரையே பெரிதென அவர் கருதியிருப்பாராகில், அவர் எவ்வளவோ போக போக்கியங்களை யனுபவித்துக்கொண்டு, தம் வாழ்நாளை வெகு சுகமாகக் கழித்துக்கொண்டு சந்தோஷமாகவே வாழ்ந்திருக்கக்கூடும். ஆனல் அவர் அந்த வழிக்கு வந்தவரல்லர். ஸ்வதேசத்தின் யோக க்ஷேமத்தை விரும்பியே அவர் தமது வாழ்க்கைச் சுகங்களனைத்தையும் துறந்துவிட்டார். இன்றைக்கோ துர்ப்பாக்கியமாகிய மேகம் அவரது சென்னியைக் கவிந்துகொண்டிருக்கிறது. இப்பொழுது அவர் ராஜபுருஷர்களின் முன் நிந்தனையும் அவமானமுமுற்றுத் தெருவிற்கிடக்கும் பிச்சைக்காரனுடைய கதியினும் பரிதாபமான ஸ்திதியிலிருக்கிறர். ஆனல் சர்வத்தியாகியாகிய இந்தக் கர்மயோகியின் தலையில் இன்று யாதொரு புகழின் முள்முடி ஒளிர்கின்றதோ, அதன் காந்திக்கு முன் மிக்கவிலையேறிய ஆபிரம் வைரக்கற்கள் இழைத்த அரசர் மணிமுடிகளும் பெருமைகுன்றி ஒளி மழுங்குவனவே! லஜபதிராயர் கைக்கொண்ட இந்தத் துறவானது தற்கால இந்தியாவில் இதற்கு முன் எப்பொழுதும் கண்டிராதது. அவரது இந்த ஆத்மதியாகத்தின்முன் சர்வத்தியாகியாய் தெள

பினதாரியாய்த் திரியும் சந்நியாசியின் துறவின் பெருமை யும் குறைந்ததாகும். பாரத வருஷத்தின் புதியவாழ்க்கை யின் சரித்திரத்திலே இவர்து பரிசுத்த நாமம் நீடூழி நிலவு வதாக.

லாலா லஜபதிராய் வக்கீல் தொழில்செய்து ஜீவித்து வந்தார். முதலில் அவர் ஹிஸ்ஸார் ஜில்லாவில் வக்கீல் தொ ழில் ஆரம்பித்தார். அப்பொழுதே அவர் ராஜாங்க விவகாரங் களில் பிரவேசித்து சுதேசத்திற்கு நன்மை பயக்கும் துறை களிலெல்லாம் உழைத்துவந்தார்.

பிறகு ஹிஸ்ஸாரைவிட்டு லாகோர் சீப்கோர்ட்டில் வக் கீல் வேலை பார்க்கவந்தார். அவர் தயாநந்த ஆங்கிலோ வே தகலாசாலைக்கு நிர்வாஹகராகவும், உதவிச்சபைத் தலைவராக வும் இருந்தார். அவருக்குச் சிறிதேனும் ஆடம்பரப் பிரிய மென்பதே கிடையாது. தமக்காகஅதிக செலவு செய்யமாட் டார். எவ்வளவு கஷ்டம் வரினும் பேசாமல் பொறுத்துக் கொள்ளும் பெருந்தகைமை வாய்ந்தவர். இவர் ஆரிய சமாஜ மதாநுசாரியாதலால் பஞ்சாப் ஆரிய சமாஜத்தின் காரியத் தைத் தன் சொந்தக்காரியம்போற் கருதி அதற்காக உழைத் துவந்தார். ஸ்வதேசத்தின் க்ஷேமத்தைக் கருதி, அவர் தம து ஜீவனத்துக்குக்கூட அடிக்கடிநஷ்டம் உண்டாக்கிக்கொண் டதுண்டு. காங்க்ரா பள்ளத்தாக்கில் பூகம்பம் உண்டாகி

ஜனங்கள் தத்தளித்துக்கொண்டிருந்தபொழுது இவர் தமது உயிருக்கு அபாயம் உண்டாகுமே என்ற பயம் சிறிதுமில்லாதவராய், அங்கே வருந்தும் ஜனங்களின் கஷ்டத்தை நிவர்த்திக்கும்பொருட்டுத் தம்மாலியன்ற பாடெல்லாம் பட்டார். துன்பப்படுவோர்களின் துர்க்கதியைப் பார்த்து சகித்திரார். காங்கிரெஸில் அவருக்கு அதிக அபிமானமுண்டெனினும், 'பவதி பிக்ஷாம்தேஹி' என்று விண்ணப்பம் செய்து முறையிடும் ஒழுங்கில் அவருக்குப் பலதடவையும் விரோதம் நிகழ்ந்ததுண்டு. ஆயினும், தன் பெயரும் பிரதிஷ்டையும் அதிகமாய்க் கொண்டாடப்பட வேண்டுமென்ற அற்ப விருப்பமானது அவரது வாழ்க்கையின் தூய்மையை யென்றும் களங்கப்படுத்தவில்லை. 1905-ம் வருஷத்திலே காங்க்ரெஸின் காரியமாக அவர் இங்கிலண்டுக்குப் போனார். அதன்பிறகு அமெரிகா கண்டத்தையும் போய்ப் பார்த்து வந்தார்.

லாலா லஜபதிராய் மிக்க சொல்வன்மையுடன் நூலியற்றும் ஆசிரியர். க்ஷீணகதியடைந்து நிர்ப்பாக்கிய நிலையிலுள்ள சுதேசவாசிகளின் துக்கத்தையும் கஷ்டத்தையும் கண்டு சகியாதவராய் அவர் என்னென்ன நூல்கள் இயற்றினாரோ அவற்றையெல்லாம் அவர் தமது ஹிருதயத்தின் இரத்தத்துளிகளை யெடுத்தே யெழுதினார்போலும். அவர் ஆங்கிலத்திலும், உருதுவிலும் நல்ல நூலாசிரியர். அவரது மேககர்ஜனை

போல் கம்பீரமாய்ப் பிரசங்கிக்கும் வாக்சக்தியானது கேட்போரின் மர்மஸ்தானத்தைப் போய்ப்பிடிக்குந் தன்மையது. ஹிருதயத்தில் மின்னற்கொடி போய்ப் பாய்ந்தால் எப்படியோ அத்தன்மையது. பஞ்சாப் தேசத்தின் ராஜநீதித்துறையில் அவர் முடிசூடாமன்னராய் விளங்கியவர். இலக்கியப்பயிற்சியில் அவருக்கிருந்த ஆர்வம் இவ்வளவவ்வளவென்று சொல்லொணாது. உருதுபாஷையில் அவர் இத்தாலிய (Italy) தேசபக்தர்களான மாஜினி, காரிபால்டி, ஆரியசமாஜஸ்தாபகரான மஹரிஷி தயாநந்த சரஸ்வதி ஸ்வாமிகள் இவர்களது ஜீவசரித்திரங்களை எழுதியிருக்கின்றார்.

இத்தகைய பெருமை பொருந்திய பேராசிரியரும், பிரசங்கநிபுணரும், பிரஜாநாயகரும், தாய்நாட்டின் உத்தமபுத்திரரும், அகண்ட பரதகண்டத்தினது கௌரவஸ்ரூபியுமான லாலா லஜபதிராய் இப்பொழுது தேசபிரஷ்டமாக்கப்பட்டிருக்கிறார். நமது அருமைத்தாயாகிய பாரதலக்ஷ்மியே இன்றுபஞ்சநத நாட்டின் மயானத்தில் உட்கார்ந்து நெடியபெருமூச்சு விட்டுக்கொண்டிருக்கிறாள்! நாற்புறத்திலும் ஊழிகாலத்துக் காரிருள் சூழ்ந்துகொண்டுவிட்டது. பிரசங்கிகளின் பெருஞ்சிரிப்பும் அட்டகாச கோலாஹலமும் இன்று வீரபூமியாகிய பாஞ்சாலநாட்டில் பெருங்கோஷத்தையுண்டாக்கியிருக்கிறது. ஹே தீனசரண்யனாகிய பகவந்! இந்த ஆபத்சமயத்தில் எம்மைக் கைவிடாமல் காத்தருள்வாய்!

---

# லாலா லஜபதிராயின் கடைசிக்கட்டுரை.

அவர் தமது கவர்ண்மேண்டுக்கும் தேசத்தவர்க்கும் எழுதியது பஞ்சாபில் ராஜரிகநிலே.

(லாலா லஜபதிராய் தமக்கு இப்படிப்பட்ட பெரும் ஆபத்து வரப்போகிறதென்று கொஞ்சமேனும் தெரியாதவராய் அடியில்கண்ட வியாசத்தை யெழுதி, அவர் 'அரெஸ்டு' செய்யப்படுவதற்கு சில நாழிகைக்குமுன் எமக்கனுப்பினர். இஃது எந்த சந்தர்ப்பத்தில் எழுதப்பட்டதோ அதை யோசிக்குங்கால், இதில் சொல்லப்பட்ட அபிப்பிராயங்களின் பெருமை இன்னும் அதிகமாகின்றது. இதை யெழுதினவரின் நேர்மையும், நிஷ்கபடத்தன்மையும், பாரமார்த்திகமும்' பொதுஜன சம்பந்தமான பிரசினைகளில் அவருக்கிருந்த நெருங்கின ஆராய்ச்சியும் இக்கட்டுரையில் வெள்ளிடை மலே போல் விளங்குகின்றன.)

## பஞ்சாபில் அதிருப்திக்குக் காரணங்கள்.

பஞ்சாபின் ஸ்திதி அத்யாபத்தாய்விட்டதென்று சிலர் நினைக்கிருர்கள். சர்க்கார் உத்தியோகஸ்தர்கள் ராவல்பிண்டி

யில் கனவான்களான 5-பிரஜைகளை அரஸ்டுசெய்து விட்ட மையால்: அவர்கள் அவ்வாறு நினைப்பது நியாயமென்றே தோன்றலாம். ஆனால் என் அபிப்பிராய மென்னவெனில், துப்பு விசாரித்துச் சொல்வதற்காக வைக்கப்பட்டிருக்கும் ரஹஸ்ய போலிஸாரே இந்த பீதியை வேண்டுமென்று கிளப்பிவிட்டிருக்கிறார்களென்றும், கவர்ன்மெண்டாரும் தம் ஏஜண்டுகள் சொல்லும் பேச்சைக் கேட்டுக்கொண்டு ஆடுகிறார்களென்றும் எனக்குத் தோன்றுகிறது. இப்படிப்பட்ட காரியஸ்திதியைக் கொண்டுவந்து விட்டதற்காக இவனையும் அவனையும் பழிப்பது புத்தியீனமாகும். இந்த மாகாணத்தில் யாரோ ஒருவரோ, இருவரோ, அல்லது மூவரோ தாம் தமக்குள்ள சக்தியையும் செல்வாக்கையும் உபயோகப்படுத்தி இப்படிப்பட்ட காரியகதியைக் கிளப்பிவிட்டிருக்கிறார்களென்று சூசிப்பதுகூட மடைமையும் ஆபாசமுமேயாகும் இவ்வாறு எவனைப்பற்றிக் கூறப்படுமோ அவனுக்கு ஒருவேளை அது அவனது சாமார்த்தியத்தைக் கொண்டாடுவதாயிருந்தாலும், உண்மையுள்ள சங்கதிகளைக்கொண்டு உள்நுழைந்து பரிசோதிக்குங்கால் அவையெல்லாம் முன்னிற்கமாட்டாமல் போய்விடும். அதிருப்தியென்னமோ தேசத்திலிருக்கிறதென்பது வாஸ்தவமே. அவ்வதிருப்தியும் அதிகமாகவேதானிருக்கிறது. ஆனால் அந்தஅதிருப்தியைஉண்டாக்கிவிட்டவர்கள் ஆங்கிலோ இந்தியரேயன்றி வேறெவருமல்

லர். அதன் காரணங்களை அவை சம்பவித்த காலக்கிரமத்தை யநுசரித்துப் பின்வருமாறு வகுத்துக் கூறலாம்.

### அமரிக்கையின்மைக்கு உண்மைக் காரணங்கள்.

1. சென்றவருஷம் ஜூலை, ஆகஸ்டுமாசங்களில் சிவில் அண்டு மிலிட்டெரி கெஜட்டென்கிற ஆங்கிலோ இந்தியப் பத்திரிகையில் காலத்தின் அறிகுறிகள்' என்ற தலைப்பின் கீழ்ப் பிரசுரமான கடிதங்களும் வியாசங்களும்.

2. பஞ்சாபிப் பத்திரிகையின் பிராசிக்யூஷனும், சிவில் அண்டு மிலிட்டெரி கெஜட்டை அவ்வாறு பிராசிக்யூஷன் செய்ய மாட்டோமென்று கவர்ன்மெண்டார் மறுத்து விட்டமையும்.

3. குடியேற்ற மசோதா சட்டமும்.

4. நிலபாத்திபதையைப் பராதீனப்படுத்துவதற்கான சட்டத்தின் திருத்த மசோதாவும் (Land Alienation Act Ammendment Bill.

5. 'பாரிடோ ஆப்' கால்வாயின்மேல் நீர் வரியை அதிகப்படுத்தினமையும்.

6. ராவல்பிண்டி ஜில்லாவில் நிலத்தீர்வையை அளவுக்குமிஞ்சி ஜாஸ்திப்படுத்தினமையும்.

7. பிளேக்கினால் சம்பவித்த பயங்கரமான மரணங்களும் அதனால் கூலியாட்களுக்குக் கொடுக்கவேண்டிய கூலி வெகு ஜாஸ்தியாய் உயர்ந்துபோய்விட்டதென்பதும்.

மேற்சொன்ன காரணங்களில் முதல் ஆறுக்கும் ஆங்கிலோ இந்தியர்களையே ஆஸ்பதமாகச் சொல்லலாம். ஏழாவதாகிய கடைசிக்காரணம் தெய்வச்செயல். அவற்றுள் முதலிரண்டு காரணங்களும் அடுத்த 4-காரணங்களில்லா விட்டால் ஒருவேளை யாதொரு ஹானியையும் விளைத்திருக்கமாட்டா. ஆயினும், அவை அனைத்தும் ஒன்றுய்ச்சேர்ந்துவிடவே அமரிக்கையின்மையை அபரிமிதமாய்ப்பெருக்கிவிட்டன. இதில் ஆருவது காரணத்தால் விளைந்த சம்பவங்கள்தான் அதிகமுக்கியமானவை. அதனால் பொருளாதார விஷயங்களில் ஒருவருக்கும் தெரியாமல் உண்டாகிவந்த பெருத்த மாறுதலானது கவர்ன்மெண்டில் கீழ் அந்தஸ்திலுள்ள மனிதர்களின் மனத்தைப் பயங்கரமாய்த் தாக்கி அவர்களைத் தத்தம் தொழில்களை நிறுத்திவிடும்படி சகஜமாய் செய்துவிட்டது. இப்படிப்பட்ட சம்பவங்கள் சில வருஷங்களுக்குமுன் விளைந்தனவென்று சொன்னல் எவரும் நம்பியிருக்கமாட்டார்கள். ஆனல் இப்பொழுதுள்ள சந்தர்ப்பத்தில் கவர்ன்மெண்ட் உத்தியோகஸ்தர்கள் சிறிதேனும் முன் யோசனையாவது ராஜதந்திர சூழ்ச்சியாவதின்றி ஜனங்களுக்குப் பிரியமில்லாத சட்டங்களைப் பிடிவாதமாயேற்படுத்தி, அவற்றிற்கு சர்வஜனங்களும்

விரோதமாயிருந்தும் அவ்விரோதத்தை சிறிதும் லக்ஷியம் செய்யாமல் அச்சட்டங்களை பலாத்காரமாய் அமுலுக்குக் கொண்டுவந்தும், தேசத்தில் வந்துள்ள பொருளாதார மாறுதல்களை சிறிதும் யோசிக்காமலும் கூலியாட்களின் கூலி அதிகப்பட்டுப்போனதற்குத் தக்கபடி சில கவர்ன்மெண்டு சிப்பந்திகளும் தங்கள் சம்பளம் உயர்த்தப்படவேண்டுமென்று கேட்டுக்கொண்டதை உத்தியோகஸ்தர்கள் கவனிக்கவில்லை அதைப்பற்றி கவர்ன்மெண்டார் கவனிக்காமலும் மேற்படி உத்தியோகஸ்தர்களைச் சும்மாவிட்டுவிட்டார்கள். அதுகவர்ன்மெண்டின் யோக்கியதைக்காவது மனச்சாட்சிக்காவது பொருத்தமுடையதாமா? இதை சரியானகாலத்தில் தக்க யோசனையுடன் கவர்ன்மெண்டார் யோஜித்துச் செய்திருப்பாராயின், எல்லா அதிருப்தியும் அடங்கிப்போயிருக்கும்.

## கலகக்காரர்கள்—பொறுப்புள்ளவர்களும், பொறுப்பற்றவர்களும்.

கலகக்காரர்கள் கவர்ன்மெண்டின் தவறுகளை யெடுத்துக்காட்டினதற்காகவும், ஜனங்களின் கஷ்ட நிஷ்டூரங்கள் தங்கள் கஷ்ட நிஷ்டூரங்களே யென்று நினைத்து நடந்ததற்காகவும் அவர்களைக் குறைகூறலாமோ? அவர்கள் சாதாரண ஜனங்களின் கஷ்டங்களைக் கண்டு பரிதவித்து அவற்றைப் பரிகரிக்கும்பொருட்டுக் கலக்கம் செய்ததினால் அவர்களுடைய அ

நுதாபத்தைச் சம்பாதித்துக்கொண்டிருக்கிறார்கள். படித்தவர்கள் பாமர ஜனங்களைச் சேராமல் நிற்கின்றார்களென்றும் ஆகையால் அந்தப் பாமர ஜனங்களின் பேரைச் சொல்லி, இவர்கள் பேசுவது நியாயமாகாதென்றும் கவர்ன்மெண்டார் படித்தவர்களை அடிக்கடி பழித்து வரவில்லையா? அந்தப்பழியைப் போக்கிக்கொள்வதற்கு இப்பொழுது சமயம்வாய்த்தது. அவர்கள் இந்தத் தருணத்தைப் பிரயோசனப் படுத்திக் கொண்டதில் தவறிநடந்தார்களென்று யாரேனும் யோக்கியமாய்ச்சொல்லமுடியுமா? இவர்கள் சாமான்ய ஜனங்களிடத்திலிருந்து ஒதுங்கி நின்று அவர்களது சுகதுக்கங்களை யெடுத்துச் சொல்லாமலிருக்க வேண்டுமோ? அவர்கள் அப்படிச் செய்திருந்தால் தாம் படித்த படிப்புக்கு அபக்கியாதியை யுண்டாக்கித் தங்கள் சொந்தஜனங்களுக்கே துரோகம்செய்த குற்றத்துக்குள்ளாக மாட்டார்களா? ஆகவே பொதுஜனங்களின் விஷயத்துக்காக அவர்கள் பாடுபட்டதனிமித்தம் அவர்களை யேன் பழிக்கவேண்டும்? ஒருவருஷத்துக்கு முன் அவர்கள் சொல்வது இன்னதென்று விளங்கவில்லை. படித்தவர்கள் ஸ்வராஜ்யம் வேண்டுமென்று போட்ட கூச்சலைப் பாமர ஜனங்கள் அறிந்து அநுசரிக்கவுமில்லை; அநுசரிப்பார்களென்றெதிர் பார்க்கவும் இல்லை. உயர்ந்த சர்க்கார் உத்தியோகங்களில் இந்துக்களை இன்னும் அதிகமாய் அமர்த்தவேண்டுமென்ற விஷயத்திலோ அப்படிப்பட்ட உரிமையால் பாமர

ஜனங்கள் தங்களுக்கு உடனே லாபமுண்டாகுமென்ற முழு நிச்சயங் கொண்டிருக்கவில்லை. "ராமனுண்டாலென்ன, ராவணனுண்டாலென்ன" என்ற வசனத்தின்படி தங்களை இங்கிலாண்டிலுள்ள இந்தியா மந்திரியாண்டாலென்ன, ஹிந்துக்களைச்சேர்ந்த ஒருலாலா ஆண்டாலென்ன, அல்லது ஒரு மகமதிய மௌலி ஆண்டாலென்ன யாராண்டாலும் தங்கள் கதியில் யாதொரு பேதமும் உண்டாகப்போகிறதில்லை யென்று சொல்லிக்கொண்டிருந்தார்கள். ஆனல் சமீபத்தில் உண்டான சட்டம் அவர்களை வேறுவிதமாய் நினைக்கும்படி செய்துவிட்டது.

அவர்கள் இத்தனை காலமாய் இந்த ராஜ்பத்துக்குச் செய்த சகாய மெல்லாம் விழலுக்கிறைத்தநீ ராய்ப் போய்விட்டதென்று கண்டு கொண்டார்கள். கொள்ளவே கவர்ன்மெண்டார் தம்மை மிகக் கொடுமையாய் நடத்தி வந்தார்களெனச் சந்தேகம் கொள்ளாமலிருக்க அவர்களால் முடியவில்லை. கவர்ன்மெண்டார் தமக்குத்தாம் வரம்பற்ற வலிமையிருக்கிற தென்ற இறுமாப்பான எண்ணத்துடன் ஜனங்களின் ஒவ்வொரு வகுப்புக்கும் ஒவ்வொரு மாதிரி சட்டங்கள் விதிக்கத் தலைப்பட்டனர். இந்த சட்டங்கள் தேசத்திலுள்ள ஒவ்வொரு வகுப்பையும் பாதிக்கத் தொடங்கவே, கடைசியில் எந்த வகுப்பாரும் கவர்ன்மெண்டாரிடத்தில் யோக்கியமாய் உற்சாகத்தை வெளியிட முடியாமற் போய்

விட்டது. சிலர் எப்பொழுதும் கவர்ன்மெண்டின் தலைப்பை யே பிடித்துத்திரிந்து கொண்டிருக்கிறார்க ளென்பது எமக் குத் தெரியும். கவர்ன்மெண்டுக்காகக் கண்ட்ராக்டுகள் செய் வதும், அங்கங்கே நடக்கும் சங்கதிகளை அவர்களுக்குத் தெரி விப்பதும், பட்டங்கள் பெறுவதற்காகக் காக்காய் பிடிப்பதும் ஆகிய இத்தியாதி தொழில்களே அவர்களது நித்திய கர்மம் அவர்களுக்குத் தலைவராயுள்ளோா கவர்ன்மெண்டு விஷயத் தில் சதா உற்சாகத்துடன் கூடியே யிருப்பார்கள். ஏனெ னின், அப்படியிருப்பது அவர்களுக்கு லாபகரமாயிருக்கிற தல்லவா? ஆனால் அவர்கள் கூடத் தாங்கள் இந்தக் குடியேற் றச் சட்ட மசோதா விஷயமான கலக்கத்திலும், கால்வாய் நீர்வரி சம்பந்தமான தீர்மானத்திலும் தலையிடவேயில்லை என்று தங்கள் மார்புமேல் கைவைத்து யோக்கியமாய்ச்சொ ல்ல முடியாது. அவர்களுக்கும் மற்றவர்களுக்கும் என்ன வித் யாசமென்றால், அவர்கள் வெளிக்கு ராஜபக்தியுள்ளவர்கள் போல நடித்து உள்ளுக்குள்ளேயே திரை மறைவில் காரியம் நடத்தினார்கள். மற்றவர்களோ தைரியமாயும் பஹிரங்கமா யும் நடந்தார்கள். இதுதான் வித்தியாசம். இந்தப் பொது ஜனவிரோதமான சட்டதிட்டங்களினால் பால்ய பிரசங்கிகள் வெளியிட்டுப் பேசுவதற்கு ஒரு பிரமேயம் ஏற்பட்டது. அ தையவர்கள் தங்கள் மனத்திற்குத் திருப்தியுண்டாகும்வரை க்கும் உபயோகித்துத்தீர்த்தார்கள். அவர்களது நிர்ப்பயமா

ன பிரசங்கங்களும், அவர்கள் உண்மையெனக் கொண்ட அபிப்பிராயங்களுக்காக எவ்வளவு அவஸ்தைகளாயினும் படுவதற்குத் தயாராயிருந்த தைரியத் தன்மையும் ஜனங்களின் உள்ளத்தில் நேரே சென்று பாயவே, அவர்கள் பேசும் சபைகளுக்குப் பல்லாயிரம் ஜனங்கள் ஆகர்ஷிக்கப்பட்டார்கள். ஆனல் இந்த பால்ய பிரசங்கிகளுக்குள் பொறுப்புள்ள பிரமுகர்கள் பின் நின்று தாங்கியிருப்பார்களென்று நினைப்பது சுத்த மதியீனம். ஏனெனில் இத்தேசமானது இப்பொழுது எவ்விதத்திலாவது ஒரு ராஜாங்கப் புரட்சிக்குத் தயாராயிருக்கிறதென்று சாவதான யோசனையும் பொறுப்பும் புலனும் உள்ள எந்தமனிதனும் நம்பமாட்டான். கட்டுப்பாட்டுக்கு அடங்கி வேலைசெய்யவேண்டுமென்பதே பஞ்சாப் மாகாணம் எப்பொழுதும் போடும் கூச்சல். இந்த மாகாணம் 9 மாசங்களாக இருந்துவரும் ஸ்திதியில் எவ்வித கட்டுப்பாட்டையும், உண்டாக்கவாவது பூர்த்தி செய்யவாவது முடியாது. கட்டுப்பாடென்கிற மரமானது வேரூன்றிப் பலன் அளிக்க வேண்டுமாயின் குளிர்ந்த ஆகாயமும், கலக்கமில்லாத பூசாரமும் ஆவசியகம். ஜனங்கள் இந்த யௌவனப் பிராயமுள்ள உற்சாகப் பிரியரான பிரசங்கிகளையும் லேக்கர்களையும் கடிந்து பேசுவதற்காகப் பத்திரிகைகளிலாவது, பொது பிரசங்கங்களிலாவது பாய்ந்து வந்து சாடா விடினும் அன்னூர்களை நிரந்தரமும், ஊர்ஜிதமுமான பிரயோஜனங்கள் விளைவதற்கு வேண்டி